# நூல் அறிமுகம்

| | |
|---|---|
| நூலின் பெயர் | கிறுக்கல்...2 |
| நூலாசிரியர் | விசு அய்யர் |
| முதற்பதிப்பு | 2021 |
| கணினி அச்சு பதிவு | மணி பதிப்பகம் |
| பக்கம் | 72 |
| எழுத்து | 12 புள்ளிகள் |
| நன்மதிப்பு | ரூபாயில் 50 |

# பதிப் புரை

எல்லோருக்கும் நம் உணர்வுகளை சொல்ல வேண்டும் எப்படியாவது வெளியே சொல்ல வேண்டும் என்று நினைப்பார்கள். பெண்களிடமும் இந்த எண்ணம் உண்டு.. ஆனால் அதை அவர்கள் முறையாக தொகுத்து நூலாக வெளியிட மாட்டார்கள்.. பொதுவாக வம்பு பேசி தங்கள் உள்ள பகிர்வுகளை பகிர்ந்து கொள்ளுவார்கள்..

இந்த நூல் ஆசிரியர் தமது எண்ணங்களை இங்கே எழுதி தந்து இருக்கிறார்கள்.. இது வம்பு அல்ல எண்ணத்தில் வந்த சிந்தனைகள்.. ஒன்றல்ல இரண்டல்ல ஒவ்வொன்றும் ஒரு விதமாக பல செய்திகளை தொகுத்து "கிறுக்கல்" என பெயரிட்டு தந்து இருக்கிறார்கள்.

இது பொதுவான சிந்தனையில் அமைந்தா நூல் தான் என்றாலும், இதில் சொல்லப்பட்ட பல விஷயங்கள் ஒரு நிமிடம் நம்மை சிந்திக்க வைக்கிறது...

சொல்லப்பட்ட ஒவ்வொரு விஷயத்தையும் ஆசிரியர் இதனை சமூகத்தை தட்டி கேட்பது போல இலாவகமாக கையாண்டு உள்ளார். ஒரு குறிப்பிட்ட சாரார்களுக்கு மட்டும் என இல்லாத நடைமுறையில் தான் கண்ட அனுபவ நிகழ்ச்சிகளை இந்த நூலில் படைத்து தந்து இருப்பது நம்மையும் சிந்திக்க வைக்கிறது. அதனை நூலாக வடிவமைத்து தருவதில் மணி பதிப்பகம் பெருமை கொள்கிறது.

இந்த நூலின் ஆசிரியர் பற்றி அதிகம் சொல்ல வேண்டிய தேவை இல்லை. தன்னை அதிகம் வெளிக் காட்டிக் கொள்ளாத ஒரு அன்பர் என நல்லோர் பாராட்டும் பெருந்தகையர். இவரது சிந்தனையும் மற்றவர்களை ஊக்குவிக்கும் அணுகுமுறையும் நம்மை மகிழ்ச்சியில் ஆழ்த்தும்.

இன் நூலின் அட்டைப் பட வடிவமைப்பும் அழகுடன் செம்மை படுத்தி பதிப்பித்து தருவதில் மணி பதிப்பகம் பெருமை கொள்கிறது. இந்த நூல் வடிவைமைப்பிலும் சரி, எழுத்து பிழை திருத்தத்திலும் சரி, குறித்த நேரத்தில் வெளிவர நேரம் பாராது உறுதுணையாக இருந்த பதிப்பக ஊழியர்களை பாராட்டுவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம்.

படிக்கும் பழக்கம் குறைந்து விட்டதற்கு காரணம் பல உள.

அவற்றுள், தொழில் நுட்ப வளர்ச்சி சமூக வலைதல வளர்ச்சி என இருக்கும் இந்த நிலையில், புத்தகங்களை வாங்கி அடுக்கி வைக்க இடம் இல்லாமை, பாதுகாக்க போதிய அவகாசம் இன்மை என்ற பல சூழலில் மக்கள் வசதிக்கு ஏற்ப இந்த புத்தகத்தினை மின் புத்தகமாக தயாரித்து தருவதில் மணி பதிப்பகம் தொழில் நுட்ப வளர்ச்சியுடன் வளர்ந்து வருவதில் பெருமை கொள்கிறது. இதன் அடுத்த வளர்ச்சியாக ஒலி புத்தகமாக (ஆடியோ புத்தகமாக) வெளிக் கொணர திட்டம் உள்ளது.

அன்பர்கள் இந்த புத்தகங்களை வாங்கி, பயன் பெற்று, தங்கள் கருத்துக்களை பதிப்பகத்திற்கோ நூல் ஆசிரியருக்கோ மின்னஞ்சலில் தெரிவிக்கலாம்..

பதிப்பாளர்.

புத்தகத்திற்கு செலவிடும் தொகை வாழ்வை வளமாக்க உதவும் ஒரு சிறந்த முதலீடு. மற்ற கேளிக்கை செலவுகளுக்காக செய்யும் தொகையை ஒப்பிடும் போது இது மிகுந்த பயனை தருவன. அதனால் மனம் நோகாமல் நல்ல

# அணிந்துரை



**என்னது புத்தகத்திற்கு அணிந்துரையா....? என்று ஒரு நிமிடம் யோசித்தபடியே இந்த புத்தகத்தை வாசித்தேன். என்னுடைய அருமை தம்பி புத்தகத்திற்கு நான் என்ன பெரியதாக அணிந்துரை தருவது என்று தான் அந்த தயக்கம்..**

**இருந்தாலும் அவரது சிந்தனைகளை தட்டி கொடுத்து தாலாட்ட வேண்டாமா என்ற ஆவல் மட்டுமல்ல. இந்த புத்தகத்தின் இரண்டாவது பாகம் முதல் பாகத்தில் வந்தது போல இன்னும் சிந்தனைகளை மெருகூட்டி வந்து இருக்கிறது என்பது மகிழ்ச்சியே.**

**இயல்பாகவே எதையாவது எழுதிக் கொண்டு** active **ஆக இருக்கும் எனது அருமை தம்பி, இதுவரை பல தலைப்புகளில் பல நூல்களை படைத்து இருக்கிறார் அவை அனைத்தும் ஆன்லைனில் கிடைக்கிறது ஆடியோ புத்தகமாகவும்** podcast **இல் ஒலிபரப்பு ஆகிறது என்பதில் வாசகர்கள் உங்களைப்போலவே எனக்கும் மகிழ்ச்சி தான்.**

**என்னடா இது.. கிறுக்கல் என்று புத்தகத்திற்கு தலைப்பு வைத்து இருக்கலாமா என்று தான் யோசித்தேன் .. புத்தகத்தின் தலைப்பை மாற்றினால் நன்றாக இருக்கும் என தான் ஒரு சிந்தனை வந்தது.. ஆனால், புத்தகத்தினை வடித்த சிந்தனைகளை பார்த்த பிறகு தான், இது நூல் ஆசிரியரின் கிறுக்கல் இல்லை. நமது சிந்தனையில் வளர்ந்த கிறுக்கல் என்பதை புரிந்து கொள்ள முடிந்தது.**

**விசு அய்யரின் இந்த கிறுக்கல் பகுதி 2, ஒரு வித்தியாசமான பார்வையில் புதிய சிந்தனையை தருவதால் அதை வாசக அன்பர்கள் விரும்பி படிப்பார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்.**

விதியை வெல்ல முடியுமா?, மகனுக்கு தாயின் அறிவுரை, மனைவியை பிரியலாமா? என ஒவ்வொன்றும் சிந்தனையை தட்டி எழுப்புவது போல இருக்கிறது. இவருக்குள் இப்படி ஒரு சிந்தனையா என்று எண்ணிப்பார்க்கையில் வியப்பாகவும் உள்ளது. எனது அருமை தம்பி என்பதில் பெருமையாகவும் உள்ளது.

ஆண்டுக்கு ஒரு முறை மும்பையில் வந்து எங்கள் வீட்டில் தங்கும் இந்த நூல் ஆசிரியர் இப்படி ஒரு அருமையான படைப்பினை தன் சிந்தனைகளை கிறுக்கல் என புத்தகமாக வெளியிடுவார் என நான் நினைத்து கூட பார்க்கவில்லை. இவருடைய முயற்ச்சிக்கு வாழ்த்துக்களும் பாராட்டுக்களையும் இங்கே பதிவு செய்கிறேன்.

இவருடைய முயற்சிக்கு உறுதுணையாக இருக்கும் அனைத்து அன்பு உள்ளங்களுக்கும் எனது அன்பான வணக்கத்தை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூல், இது போன்ற நூல்களை வாங்கி அவர் தம் சிந்தனைகளை புரிந்து கொண்டு நம்முள் மறைந்து இருக்கும் நம்மை தட்டி எழுப்புங்கள்.. ஏதோ கிறுக்கல் என ஒதுக்கி தள்ளி விடாமல், இந்த புத்தகத்தை வாங்கி நூலாசிரியரை ஊக்கப்படுத்துங்கள். உங்களுக்கு இது புதிய அனுபவத்தை பெற்று தரும் என உறுதியாக நம்புகிறேன்.

வாழ்த்துக்கள்.

அன்புடன்,
அருமை சகோதரி ஜெயலக்ஷ்மி
email:jayal30@gmail.com

# என்னுரை

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்

அனைத்தே புலவர் தொழில்

இந்த புத்தகத்தில் உள்ள சிந்தனைகள் முக நூல் பக்கங்களுக்காக எழுத தொடங்கியது.. ஆனாலும் ஒரு சில தவிர மற்றவை முக நூல் பக்கங்களில் பகிர வில்லை.. எனது தனிப்பட்ட குழு நண்பர்களுக்கு மட்டும் வாரம் ஒன்றாக பகிர்ந்து வந்தேன்.. அதனை தொகுத்து ஒரு புத்தகமாக போடலாமே என்று தான் இந்த புத்தகத்தை உங்கள் கைகளில் தவழ விடுகிறேன்.. இந்த புத்தக குழந்தையை உச்சி முகர்ந்து, கொஞ்சி மகிழுங்கள்..

ஒரு முறை படித்து விட்டு கை கழுவும் அந்த முகநூல் நல்ல சில நட்பை ஏற்படுத்திக் கொடுத்தது என்பதில் மாற்றுக் கருத்து இல்லை என்றாலும், இதனை முக நூல் பக்கங்களில் பகிர்ந்து இருந்தால் சில லைக் கிடைத்து இருக்கும். சில கமென்ட் கிடைத்து இருக்கும்.. ஆனால் இன்னொரு முறை தேடிப்பார்ப்பவர்கள் எத்தனை பேராக இருக்க முடியும்..

இந்த கிறுக்கலில் வந்த சிந்தனைகள் பல நடை முறை அனுபவங்களில் கண்டது, சில படித்து வந்தது. எப்படி இருந்தால் தான் என்ன இந்த சிந்தனைகளை ஒன்றாக திரட்டி நூலாக்கி தைத்தால் தானே முட்டையில் விழுந்த விந்து கருவாகி காத்திருந்து உருவாகி நாம் அதை வளர்க்க அது நம்மை உயர்த்த என ஒரு சுழற்சி முறையில் வரும் தொடர் பயணமாக இருக்கும்..

அப்படி வளர்ந்தது தான் இந்த கிறுக்கல்.. மனம் விட்டு சொல்ல வேண்டும் என்றால் இந்த புத்தகம் தயாராகி சில ஆண்டுகள் ஆகிவிட்டன. இதற்கு புத்தக வடிவம் தேவை

தானா.. என்ற சிந்தனையிலேயே எடுத்து வைத்து விட்டேன்..

இதுவும் சென்ற ஆண்டு வர வேண்டியது.. தொடர்ந்து வந்த கொரானா ஒட்டிய அடைப்பினால் முட்டைக்குள் அடைபட்ட குஞ்சு போல, இப்போ பிரசவமாகி உள்ளது.. அடைப்புகள் சிந்தனைக்கும் முயற்ச்சிகளுக்கும் இல்லை தானே.. என்பதை சொல்ல இந்த வெளியீடு ஒரு சான்றாக இருக்கட்டுமே..

மற்ற சில புத்தகங்களை பதிப்பகத்தார் வெளியிடும் போது இதனையும் வெளியிடலாமே என ஆலோசனை சொன்னார்கள். அந்த அடிப்படையில் இதனை வடிவைமைத்து நூலாக்கி விட்டேன்.

இந்த புத்தகம் வழக்கம் போல மின்னூலாக வருகிறது. அச்சு நூலாக இருந்தால் புத்தகத்தை அடுக்கி வைப்பதற்கும் பாதுகாப்பதற்கும் சிரமமாக இருக்கும்.. இப்படி மின் நூலாக வருவதால், இதனை எங்கும் எடுத்துச் செல்ல முடியும்.. **cloud** இல் சேர்த்து வைத்து விட்டால் எப்போதும் படித்து ஓய்வு பெறலாம்.. நான் பயணத்தின் போது மின்னூல் உடன் தான் இருப்பேன்.. அத்தனை சுலபம் இது. ஒரு சின்ன சிப்புக்குள் எத்தனைபுத்தகங்கள்…

இது கிண்டல், விக்கிபீடியா, **Google playstore** மற்றும் ஸ்கிரைப்டுவில் கூட கிடைக்கும்.. வாய்ப்பு உள்ளவர்கள் அங்கே படித்து பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். நண்பர்கள் உறவுகளுடன் பகிர்ந்து கொள்ளலாம்.

படிக்க நேரமில்லலை என்பவர்களுக்காக இது ஆடியோ புத்தகமாகவும் கேட்டு மகிழ முடியும். இணைப்பில் சேர்ந்து ஆடியோ புத்தகமாக கேட்க **spotify**ல் **Channel G** ல் இணைந்து கொள்ளுங்கள்.

எப்போதும் உங்கள் காதுகளில் இனிய குரலில் ஒலிவலம் வரும்.

புத்தகம் படிக்கும் பழக்கம் குறைந்து விட்ட நாளில் தொழில் நுட்ப வளர்ச்சி பெருகிவிட்ட இந்த சூழலில் இதனை வாய்ப்பாக பயன்படுத்திக் கொண்டு நல்ல சிந்தனையை தர வேண்டும். நாமும் வளர வேண்டும் அது உங்களுக்கும் சுலபாமகவும் பயன் தரும்படியும் இருக்க வேண்டும் என இப்படி செய்து உள்ளது.

இந்த புத்தகம் வெளிவர துணையாக இருந்த மணி பதிப்பகத்தாருக்கும், இந்த புத்தகத்திற்கு அணிந்துரை செய்து வாழ்த்துக்கள் வழங்கிய என் அன்புக்குரிய **அருமை சகோதரி ஜெயலக்ஷ்மி** அவர்களுக்கும் என் நெஞ்சம் எனும் மெய் தீட்டியில் நன்றியை பதிப்பு செய்கிறேன்.

எனது அன்புக்குரிய வாசகர்கள் வழக்கம் போல இந்த புத்தகத்தையும் வாங்கி ஊக்கப் படுத்த வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்

விசு அய்யர்

# அன்புள்ள...அம்மாவிற்கு ...

காலங்கள் மாறிவிட்டன
கடமைகளும் மறைந்து விட்டன

அன்று நீ என்றிருந்தது
இன்று நான் என மாறிவிட்டது

நம்மை நாம் தயாரித்துக் கொள்ள வில்லையெனில்
நாம் இவ்வுலகில் வாழத் தெரியாதவர்கள்..

வாழ தெரியாதவர்களுக்கு
வாழ்க்கை ஒரு கேள்வி குறி தானே..

அதனால் தானோ காலன் கூட
அவ்வுலகிற்கு அழைத்துச் செல்ல மறுக்கிறான்..

அது சரி.. சொல்ல வந்த விஷயத்திற்கு வருவோம்
அது பின்வரும் கடிதம் சொல்லும்

ஒரு தாய் தன் அன்பு மகனுக்கு
ஒரு கடிதம் எழுதுகிறாள்..

அதை நீங்களே படித்துப் பாருங்கள்..
அப்புறம் ஒரு நிமிடம் சிந்தித்து

வழக்கம் போல் உங்கள் கருத்தை
வரைந்திடுங்கள்.. உங்கள் சிந்தனையுடன்

# அன்புள்ள மகனுக்கு....

இனி
இந்த தாயின் கடிதம்..

“அன்பு மகனுக்கு அம்மா எழுதுவது%.! உன்
அம்மா எழுதும் கடிதம்

வசதியாகத்தான் இருக்கிறது மகனே% நீ கொண்டு
வந்து சேர்த்த இந்த முதியோர் இல்லம்.

பொறுப்பாய் என்னை ஒப்படைத்து விட்டு நீ வெளியேறிய போது,
இது போல் உன்னை
வகுப்பறையில் விட்டதும் நீ கதறக் கதறக் கண்ணீரை மறைத்தபடி
புறப்பட்ட காட்சி

முதல் தரமிக்க இந்த இல்லத்தை நீ தேர்ந்தெடுத்ததை
அறிகையில் அன்று உனக்காக
முதன்மையான பள்ளி எதுவென்றே ஓடி அலைந்ததை ஒப்பீடு
செய்கிறேன்!

இதுவரையில் ஒரு முறையேனும் என் முகம் பார்க்க நீ வராமல்
போனாலும்
இன்று வரை என் பராமரிப்பிற்கான மாதத் தொகையை அனுப்பி
வைப்பதற்காக

மனம் மகிழ்ச்சியடைகிறது. நீ விடுதியில் தங்கிப் படித்த போது
மனது துடிக்கும் உன்னைப் பார்க்க வேண்டும் என்று

அதன் எதிர்வினையே இதுவென்று இப்போது நானும்
அறிகிறேன்! என்ன செய்ய முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்
தானே

இளம் வயதினில் நீ சிறுகச் சிறுக சேமித்த அனுபவத்தை என்
முதுமைப் பருவத்தில்
இன்று மொத்தமாக எனக்கே செலவு செய்கிறாய் ஆயினும்

உனக்கும் எனக்கும் ஒரு சிறு வேறுபாடு.
உனக்கு நான் கற்றுக்கொடுத்தேன்

வாழ்க்கை இதுதானென்று! இப்போ நீ கற்றுக் கொடுக்கிறாய்
எனக்கு
உறவுகள் இதுதானென்று...

நீ இருக்க ஒரு கருவறை இருந்தது என் வயிற்றில்
நான் இருக்க ஒரு இருட்டறை கூடவா இல்லை உன் வீட்டில்
பாசம் இப்போ
பாராமாகி போச்சு..

நான் படிக்காதவள் தான் இன்று
நானும் படித்துக் கொண்டிருக்கிறேன்

அன்புள்ள அம்மா.."



# திருந்த வேண்டியது யாரு..?

நம்மை திருத்திக் கொள்ளாமல்
நாம் பிறரை திருத்த முயல்வது சரியா ?

நம்மில் எத்தனை பேர்; மிகச் சரியாக எத்தனை முறை
நம்முடன் உள்ளவரிடம் இப்படி நடந்து கொள்கிறோம்

நான் சரி என சொல்வது சிறந்தது
நான் மட்டுமே சிறந்தவர் என மற்றவர்களின்

குறைகளிலேயே தனக்கு பெருமை சேர்த்து மற்றவரை
குட்டிக் கொண்டு இருப்பவர்கள் அலுவலகத்திலும் வீட்டிலும்
உண்டு

“மின்சாரம் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது” என செய்தி வந்தால்
“மெழுகுவர்தி தொழிலுக்கு ஆபத்து” என மறு செய்தி
வெளியிடுவார்

எனக்கு தெரிந்தது சரி என்றும் மைக் வைத்துக் கொண்டும்
உனக்கு ஒன்றும் தெரியாது என்றும் சொல்லு(ஊது)வார்..

“உன் கண்ணில் உள்ள உத்திரத்தை விட்டுவிட்டு
உன் சகோதரன் கண்ணில் உள்ள துரும்பை பார்ப்பது என்ன”

என சொல்கிறது; நாம்
எல்லோரும் அறிந்த கிருத்துவ விவிலியம்

ஏன் இவர்கள்  இப்படி நடந்து கொள்கிறார் என
எப்போதாவது யோசித்தது உண்டா ?

இது தான் காரணமாக இருக்கலாம் என சொல்கிறோம்,
இதுவேவாக இருக்கவேண்டிய அவசிமில்லை.

சுருக்கமாக சொன்னால்
“சுய கவுரவம்” (selfesteem) பிரச்சனை

‘‘கர்வம்’’ என்பது அடுத்தது..
கஷ்டம் வந்தால் கூட சிலர்

என்னை மாதிரி யாரும்
எப்போதும் கஷ்டப்படக்கூடாது என

கஷ்டத்தினில் கூட தன்
கர்வத்தை கூட்டிக் காட்டுவார்கள்..

அறையில் உட்கார்ந்து கொண்டு
அங்கே பிஸியாக இருப்பதாக காட்டிக்கொள்வார்

அது ‘‘ஆணவ’த்தின் முற்றிய நிலை
அதனை மூன்றாவதாக சொல்லலாம்

இந்த மூன்றில்
எந்த நிலையில்

எத்தனை சதவீதம்
எதில் என்பதினை வைத்து

அவர்களின் நிலையினை
அப்படியே கணக்கிடலாம்

இவர்களை குறை சொல்வது நம் நோக்கமல்ல
இவர்களை திருத்துவதும் நம் பணியல்ல

இந்த நிலையில் இருக்கும் இவர்களுடன் உயர்ந்த நிலையில் இருக்கும் அவர்களும் இருக்கிறார்கள் என்ற னரயடவைல யை காட்டி

இந்த கதையினை படியுங்கள்
இதில் நாம் எந்த நிலையில் என சிந்திப்போமா ?

தவறு செய்தவர் யார் ?
ரொட்டிக் கடை வைத்திருந்தார் ஒருவர்.

அவர் கடைக்கு வெண்ணெய் சப்ளை செய்பவர் மீது
அவருக்கு வெகுவாக சந்தேகம்.

தன்னை அவர் ஏமாற்றுவதாக வருத்தம் இருந்தது.
அரை கிலோ வெண்ணெய் என்று
அவர் தருவது அரை கிலோவே இல்லை.

எடை குறைவாக இருக்கிறது
என்று குற்றம் சாட்டினார்.

சண்டை முற்றி ஒரு நாள் பஞ்சாயத்து நீதிபதி முன் வழக்கு வந்தது.

வெண்ணெய் வியாபாரி தன்னிடம் கொடுத்த
வெண்ணெய் பொட்டலத்தை நீதிபதி முன்

நிறுத்துக் காட்டிய ரொட்டிக் கடைக்காரர்,
பாருங்கள் 450 கிராம் தான் இருக்கிறது.

இப்படித்தான் என்னை பலமுறை ஏமாற்றி இருக்கிறார்.
இவரை தண்டியுங்கள்'' என்று கூச்சலிட்டார்.

நீதிபதி வெண்ணெய் வியாபாரியை பார்த்து
''என்ன சொல்கிறீர்கள் ஒவ்வொரு முறையும் 50 கிராம்
குறைவாகத் தரலாமா? அது குற்றமில்லையா?'' என்று கேட்டார்.

''ஐயா.. என்னிடம் எடைக்கல் கிடையாது.
அதனால் 500 கிராம் எடையுள்ள பொருள் ஏதேனும் ஒன்றை
எடைக் கல்லுக்குப் பதிலாக பயன்படுத்துவது வழக்கம்.

பெரும்பாலும் இவரது கடை ரொட்டியைத் தான் வாங்குகிறேன்.
அதையே அவ்வாறு பயன்படுதுவேன். பாக்கெட் மீது எடை
500கிராம் என்று எழுதப்பட்டிருப்பதை நம்பி இவரது ரொட்டியை
எடைக் கல்லுக்குப் பதிலாக

தராசில் பயன்படுத்துவேன். இப்போது பாருங்கள் என்
வெண்ணெயும் அவரது ரொட்டியும் சம எடையாக இருக்கும்.''
என்று தராசில் இரண்டையும் எதிர் எதிராக வைத்தார்.

சமமாக இருந்தது.

நீதி: எல்லோரும் நான் சரியானவர் என்றும் பிறர் தன்னை ஏமாற்றக் கூடாது என்றும் நினைக்கிறார்களே ஒழிய தானும் பிறரை ஏமாற்றக் கூடாது மற்றவர்களிடமும் சரியானவைகள் இருக்கலாம் என்று நினைப்பதில்லை.



# கரி அடுப்பு

நினைவிருக்கிறதா
நிழலாடுகிறதா – இது கரி அடுப்பு

இதில் தான் முன்னர் சமையல் செய்வார்கள்
அப்பளம் சுட்டு சாப்பிட தருவார்கள்

அன்றைய நாளில்
அது தான் எங்களுக்கு ஸ்நாக்ஸ்

இரண்டு சுட்ட அப்பளம்
இதோடு ஒரு டபரா டம்ளர் காபி அவ்வளவு தான்

பலாக் கொட்டை சுடுதல் மற்றும்
சோளத்தை சுடுதல் என அனைத்தும்

இரும்பில் அடுப்பு எங்கள் வீட்டில்
இருந்தது ரொம்ப நாட்களாக

இப்போ இதுவே மண்ணில்
இன்றும் வாங்கி வைத்துள்ளேன்

இந்த கரி அடுப்பில் தான் அவ்வப்போது சமையல்
இது பழசு தான் என்றாலும் நினைவுக்கு பகிர்ந்து கொள்கிறேன்

நீங்களும் இது பற்றி அறிந்தால் ஒரு வரி எழுதி
நினைவில் கொள்ளலாமே



# மயக்கமா .. கலக்கமா?

மேகி சத்துள்ள உணவா என
மேலும் பல சோதனைகள்

என்ன சாப்பிட வேண்டும்
என நீதி மன்றம் சொல்லும் நிலை

இந்தியாவில் என்றால் நாம்
இன்னமும் சுதந்திரம் பெறவில்லை

என்று தானே பொருள்
என்ன சொல்றீங்கன்னு கேட்கறீங்களா

உடலுக்கு தீங்கு செய்யும்
உப்பு இதில் இருக்குன்னு சொல்றாங்க

பட்டியல் போட்டு சொல்ல
பல நம் வசம் இருக்க அவற்றில் சில

பூச்சி மருந்து தெளிக்கப்பட்ட
புத்தம் புதிதாய் வரும் காய்கறிகள்

பச்சை வாழைப்பழத்தை கலர் போட்டு
பசுமை மாறாமல் வரும் மஞ்சள் வாழைபழம்

கல்கட்டி பழுக்க வைத்த
கலர் ஃபுல்லான மாம்பழம்

உடனடி காபி என சொல்லும்
உங்கள் வீட்டில் இருக்கும் அந்த சேஷே

கூடுதல் உப்புசேர்க்கப்பட்ட சோப்பு
கூடுதல் அழ(ழு)கை தரும் என சொல்லுது

மானம் மறைக்க ஆடைகள் என்ற நிலை
மாறி உடலை ஒட்டி அணியும் பெண்களின் ஆடைகள்

உள் உறுப்புகளுக்கு அழுத்தம் தருவது மட்டுமல்ல அவை
உள்ளாடைகளை காட்டும் மெல்லிய ஆடைகள்

இரவில் கண்விழித்து வேலை பார்க்கும்
இளைஞர் பட்டாளங்களுக்கு சொல்லுங்கள்

இரவில் கண்விழிப்பது உடல் நலனுக்கு
இப்போது அல்ல எப்போதும் நல்லதல்ல என்று

இவைகளை எல்லாம் தடை செய்யாமல்
இதுக்கு மட்டும் தடை என்றால்

கொடுக்க வேண்டியவர்களுக்கு
கொடுக்க வில்லை என சொல்லாமலே புரிகிறது

விளம்பரங்களை தடை செய்யுங்கள்
விற்பனையை தடை செய்யதாதீர்கள்

மேகிக்கு ஆதரவாளனாக பேசவில்லை
மேலும் சொல்ல வருவதெல்லாம்

மக்களை குழப்பாதீர்கள்
மாறாக அதன் மூலம்

அதுபோல ஆதாயம் தேடாதீர்கள்
அப்படி மக்கள் மீது உண்மையான

அக்கறை இருக்குமானால் ஆரோக்கியமாக
அடுத்த செய்ய வேண்டியதை யோசியுங்கள்

போலித்தனமாக வித்தைகள் வேண்டாம்
போதும் என மக்கள் மகிழும் படி இருக்கட்டும்



# ஆன்லைன் ஷாப்பிங் தெரியுமா?

ஆன்லைன் ஷாப்பிங் தெரியுமா?
ஆத்துக்குள்ள கடையை கொண்டு வர்றது தானே

ஆன்லைன் பாங்கு என்பது நம்மளுடைய
அறைக்கு வங்கியை கொண்டு வருவது தான்

பணம் எடுக்கனும்னா போங்குக்கு போன காலம் மாறி
பணம் வேணும்னு போன் பண்ணினால்

வீட்டு வாசல்ல ஒருத்தர்
வேண்டிய பணத்தை தர காத்திக்கிட்டு இருக்காரு..

கடன் வாங்க கூட பேங்குக்கு போக வேண்டாம்
காசை பாங்கில போட்டுட்டு நுஆஜயில வசூல் செய்யறாங்க

ஆனால் பாருங்க எத்தனை முறை சொன்னாலும் நம்ம
அம்மாமாருங்க கேட்க மாட்டீஙகிறாங்க...

பிள்ளைகளை பள்ளிக் கூடத்தில சேர்க்க
பசி உறக்கம்  விட்டுட்டு பள்ளியை தேடி ஓடுறாங்க

300 நாட்கள் படிச்சதை
3 மணி நேரத்தில எழுதி இவுங்க

நம்மள படிச்சவன்னு
நமக்கு பட்டம் கொடுக்கப் போறாங்களாம்

படிப்பு வேறு அறிவு வேறு
பதறாம கேளுங்க சொல்ல வர்ற விஷயத்தை
பெற்றோர்களுக்கு ஒரு ஆலோசனை
பத்தி எரியுதுன்னு திட்டாதீங்க...

உங்க பிள்ளைகளை பள்ளியில் சேர்க்காதீங்க
உங்க பிள்ளைகள் அறிவாளிகள் தான்

அவர்கள் அறிவாளிகளாகவே வ(ள)ரட்டும்
அவர்களை பள்ளியில் சேர்த்து முட்டாள்களாக்காதீர்கள்

ஆண் பிள்ளையாக இருந்தாலும் சரி
அல்லது பெண் பிள்ளைகளாக இருந்தாலும் சரி

அவர்களை இப்போ
ஆன்லைனில் படிக்க வையுங்க...

ஒழுக்கத்தை கற்றுக் கொள்ளத்தான் முன்பெல்லாம்
ஒழுங்கா பள்ளிக்கு போக நம்மள தயார் பண்ணுவாங்க

பள்ளிகளிலேயே ஒழுக்கம் இல்லேன்னா...
பாவி மனசு பத்திக்கிட்டு தானே வரும்...

நல்ல சிந்தனையும் இப்போதெல்லாம்
நல்லொழுக்கமும் உள்ள ஆசிரியர்கள் குறைவு

இருக்கும் சிலரை நிர்வாகம் கவணிப்பதில்லை என
இவர்களுக்கும் வருத்தம் ....

படித்தவன் பாடம் நடத்துகிறார்
படிக்காதவன் பள்ளிக் கூடம் நடத்துகிறார்

என்று ஒரு கவிதை
எப்போது படித்தது நிழலாடுகிறது...

ஆன்லைன் ஷாப்பிங்
ஆன்லைன் பேங்கிங் போல
ஆன்லைன் பாடத்திற்கு
அவர்களை தயார் படுத்துங்கள்...

கணினியை முழுமையாக பயன் படுத்தி
கண்டெடுங்கள் உங்கள் பிள்ளைகளிடம் உள்ள கொளம்பஸ்ஸை

ஒரு தகவல் சொல்லட்டுமா... கம்ப்யூட்டர் என்று
ஒருக்காலும் கிடையாது நாங்கள் படிக்கும் போது

ஆன்லைனில் தான் நான் கம்ப்யூட்டர் படித்தேன்
ஆஹா என பாரட்டுமளவுக்கு இப்போ எனக்கு

கம்ப்யூட்டர் அறிவு இருக்கலாம் சாதராண
கம்ப்யூட்டர் பயன் பாடு அல்ல

சோடோகோட் லாஜிக் நேவிகேஷன் என
உயர் நிலை மென் பொருள் வரை அத்துப்படி..

ஆன்லைனில் படிக்க வைப்பதால்
அவர்களுக்கே தானே ஆர்வம் வரும்..

அறிவுரை பெறுவதை இன்றைய இளசுகள்
அனுமதிப்பதில்லை அதனால் பள்ளிகள் தேவையில்லை

பள்ளிகளை இடித்து ஷாப்பிங் மால்களாகவோ
பயன் உள்ள மற்றவைகளுக்கோ வைத்துக் கொள்ளலாம்

இன்னமும் வருத்தமாக சொன்னால்
இங்கே சில பள்ளிகள் நட்டத்தில் நடந்து கொண்டிருக்கிறது

எல்லாம் இலவசம்

என அரசு அறிவிப்பதால் பல
பள்ளிகள் நிர்வாகம் செய்வதில்
பல சிக்கல்கள் இருப்பதாக செய்தி...

எது எப்படி இருந்தாலும்
எங்கே உங்க காதை கொடுங்க..

உங்க பிள்ளைகளை பள்ளியில் கல்ஊரியில் சேர்க்காதீங்க
உபயோகமாக அவர்கள் வ(ள)ர அவர்களை

ஆன்லைனில் படிப்பில் சேர்த்து விடுங்கள்
அட்மிஷன் பிரச்சனை இல்லை

கவுன்சிலிங் இல்லை, பெரிய தலைகளுக்கு
கட்டிங் கொடுக்க தேவையில்லை...

நாளைய தலைமுறைகளை
நல்லவர்களாக பிள்ளைகளை

தயவு செய்து பள்ளிக்கு அனுப்பாதீர்கள்...
தரமான சமூகத்தை உருவாக்க தொடங்குங்கள்..

தெருவெல்லாம் சொல்லி வைப்போம்
தொடருங்கள்.. என்னோடு...



# காதல் தோல்வி

பெண் இல்லாமல்
ஆண் வாழ்க்கையில்லை

அது போல் பெண்களுக்கு
ஆண் இல்லாமல்% என சொல்வதுண்டு

முன்பெல்லாம் காதல் தோல்வி என்றால்
முகம் நிறைய தாடி ஒரு ஜோல்னா பை – பிறகு

காதல் தோல்வி என்றவுடன்
கட்டாயமாக தற்கொலைகள்–பின்நாளில்

காதல் தோல்வி என்றால்
“எங்கிருந்தாலும் வாழ்க” என தேறியவர்கள்–இப்போ

காதல் தோல்வி என்றால்
கவலையில்லை

விவகாரத்து வாங்கி வரும் வரை காத்திருக்கிறேன் என
வளர்ந்து விட்ட இவ்வுலகில்

பெண்களை பட்டினத்து சுவாமிகள் வேறுவிதமாக
படம் பிடித்து சொல்லி உள்ளார்

ஆண்களை விட உண்மையில்
பெண்கள் அறிவாளிகள். அது மட்டுமல்ல

கர்வமும் கொஞ்சம் அதிகமாக உண்டு
கவலை படவேண்டாம் சண்டைக்கும் வரவேண்டாம்

உங்கள் கருத்து வேறு விதமாக இருக்கலாம் அதற்காக
எங்கள் கருத்தை மறுக்க வேண்டியதில்லையே

# இரட்டை நாக்கு இது தானா

ஒரு ஆண் கடுமையா உழைச்சா...
ஒரு நாள் கூட பொண்டாட்டியைக் கண்டுக்க மாட்டேங்கறான்னு
மட்டம் தட்டுவாங்க.

பொண்டாட்டியை கவனிச்சுக்கிட்டா.. அவளையே சுத்தி சுத்தி
வரான்.
வேலை வெட்டி இல்லாத பயன்னு
கட்டம் கட்டுவாங்க..

“அழகா இருக்கே”ன்னு ஒரு பொண்ணைப் பார்த்து சொன்னா
அது ஈவ் டீசிங்..ன்னு
கிளப்பி விடுவாங்க.

கண்டுக்காம போனா அழகை ரசிக்கத் தெரியாத ஜடம்..!ன்னு
காலுக்கு கீழே
அமுக்கி வைப்பாங்க.

எதுக்காச்சும் அழுதோம்ன்னா பொம்பள மாதிரி
எப்ப பார்த்தாலும் அழறான்
பாரும்பாங்க..

திடமா இருந்தா
திமிரை பாரு – நெஞ்சுல ஈவு இரக்கம் இல்லாத அரக்கன்னு
வாருவாங்க..

முடிவை பொண்டாட்டியை கேட்டு எடுத்தா தானா
முடிவெடுக்கத் தெரியாத முட்டாள்..ன்னு
பட்டம்.

அது சரின்னு நாமளே ஒரு முடிவு எடுத்தா – தான்
“ஆம்பிளைங்கற அகங்காரம்..”ன்னு
திட்டும்.

ஏதாவது பிடிச்சது வாங்கிட்டுப் போய் கொடுத்தா ”
என்னத்துக்கு இப்போ காக்கா பிடிக்கிறீங்க.. ?”

அப்படின்னு ஒரு நக்கல்.

ஒன்னும் வாங்கிட்டுப் போகலேன்னா "
ஒரு முழம் பூவுக்கு விதியத்துப் போயிட்டேனே..!" ன்னு
மூக்கை சிந்திக்கிட்டு விக்கல்..

எதாவது ஒரு குறிக்கோளோடு உழைச்சா, " வேலையையே
கட்டிகிட வேண்டியதுதானே
"எதுக்கு உங்களுக்கு பொண்டாட்டி.. ?" ன்னு
ஏசல்.

சினிமாவுக்கு அழைச்சுட்டுப் போனா, " அந்த ஹீரோ மாதிரி
ஒரு லட்சியம் வேணுமுங்க எப்படி உழைச்சு முன்னேறிட்டான்
பாத்தீங்களா.. ?" ன்னு
பூசல்..

இந்த கருத்து ஒஹோ என்று
இருக்கிறதுன்னு எழுதினா,

ஆனாதிக்க உலகம்
அப்படின்னு சொல்லுவாங்க.

இது தப்பு... பெண்கள் நல்லவர்கள்ன்னு எழுதினா
இவனுங்க உலகம் தெரியாத பைத்தியம்ன்னு சொல்லுவாங்க.

பெண்களையோ அல்லது
ஆண்களையே குறை சொல்ல வில்லை

இரண்டு பக்க நிலைகளை
இப்படி சிந்திக்க எடுத்து வைக்கின்றோம்..

ஒத்துப் போகிறதா நம் அனுபவம் என்று
சிந்தித்துப் பாருங்களேன்..



# பெண் பார்க்கும் படலம்

கல்யாணத்திற்கு பெண் பார்ப்பது இப்போ
கடந்து விட்டது..

ஆண்களுக்கு அநேகமாக
அரேஞ்சுடு மேரேஜ் வாய்ப்பு குறைந்து விட்டது

பதிவு செய்ய எல்லா மேட்ரிமோனியிலும்
பக்கம் பக்கமா புரட்டினாலும்

பெண்கள் எதிர்பார்ப்பு எக்கச்சக்கம்
பேராசை இதிலும் பெண்களுக்கே..

மாமியார் நாத்தனார் இருக்க கூடாது இருந்தாலும்
மறுவீடு வருவது போல் உடனே போயிடனும்

எனக்கு 50 ஆயிரம் சம்பளம் அதனால்
என்னை விட அதிகம் சம்பாதிக்கனும்

என்னுடைய சம்பளத்திற்கு கணக்கு கேட்ககூடாது
எதுவானாலும் என்னை கேட்டுத்தான் செய்யனும்

இப்படி பெண்கள் எத்தனையே கண்டிஷன் போடும்
இந்த சூழலில்.. இப்படி ஒரு அம்மா.. இங்கே..

அதனால இப்படி ஒன்னு
ஆணுக்கு அறிவுரை சொல்வது போல்

அவுங்க கேட்க மாட்ங்கன்னு தெரிஞ்சும்
அட்வைஸ் பெண்களுக்கு மட்டும் எத்தனை நாள் பன்றது

ஒங்களுக்கு பிடிச்சா
ஒரு பிடி தாங்க இல்லாட்டி

முகட்டு வளையத்தை பாத்துக்கிட்டிருக்கறவங்களுக்கு
மூஞ்சியிலே ஒரு இடி தாங்க..

# மகனுக்கு தாயின் அறிவுரை

திருமணம் ஆவதற்கு முன்னால் உன்னிடம் சில விஷயங்களைச் திரும்ப திரும்ப சொல்ல வேண்டும் என்று முடிவு செய்தோம்.

இது உனக்கு வியப்பாக இருக்கலாம். பெண்ணுக்குத்தானே இப்படிச் சொல்லுவார்கள் என்று நினைக்கிறாயா? இல்லை கண்ணா...

நாங்கள் மனம் திறந்து சொல்வதைச் சொல்லி விடுகிறோம். நயமாக காதில் போட்டு வைத்தால் சில விஷயங்கள் மனதிலும் இறங்கும்.

அதுவே தக்க சமயத்தில் உதவக்கூடும்!
அதற்காகத்தான் இந்த அறிவுரை

இதுவரையில் பெண்ணென்று வீட்டில் உன் அம்மாவை மட்டுமே பார்த்திருக்கிறாய்.
இன்றும் அவள் சமைப்பதையும், வீட்டை வைத்துக் கொள்வதையும்,

பாடம் சொல்லித் தருவதையும் பாடுவதையும், கோலம் போடுவதையும்,
பண்டிகைகளை முழுமையாகக் கொண்டாடுவதையும் எதிலும் திறம்பட எடுக்கும்

முடிவையும் பார்த்து என் "அம்மாதான் பெஸ்ட்" என்று எண்ணியதில் தப்பில்லை.
முழுமையாக உள்ளுக்குள் எனக்கு அது பெரிய கிரீடம்தான்!

இனிமேல் அதையே மனதில் அசைபோடாதே! அதைத் தாண்டி வா! அம்மா பெஸ்ட்
இது போன்ற உன் கருத்தை உள்ளத்தின் ஆழத்தில் மட்டும் வைத்துக்கொள்.

வார்த்தைகளில் உன்னவளுக்குத் தெரியப்படுத்த வேண்டிய அவசியம் இல்லை.

வாயில் சொல்லும் தாய் சொல்லைத் தட்டாதே! சிறிய முகமூடிதான்.

அதைத் திறம்படப் பயன்படுத்து!
அது எல்லோரையும் மகிழ்விப்பதைப் புரிந்துகொள்வாய்.

எங்க அம்மா ரொம்பக் கஷ்டப்பட்டிருக்கிறார்கள்., அவர்களை அனுசரித்துக் கொண்டு
எப்படியாவது போக வேண்டும் என்ற வசனங்களைப் பேசாதே!

அப்படிச் சொன்னால் அவளுக்கு மனதில், அப்படியானால் அம்மா பிள்ளையாகவே இருக்க வேண்டியதுதானே. அப்புறம் எதுக்கு நான்? என்று

சிறு கசப்பு உணர்வு தோன்றும். அவள்தான் உன் உலகம் என்பதை ஒவ்வொரு
சின்ன விஷயத்திலும் அவளுக்குப் புரியவை.

அம்மாவும் அப்பாவும் சண்டை போட்டுக் கொள்வார்கள் என்றும் சொல்லாதே!
அதையே என்றாவது உன் மீது திருப்பக் காரணமாக நீ இருக்கக்கூடாது.

சண்டையில்லாவிட்டால் நீ கேட்டதெல்லாம் கிடைத்திருக்குமா? சர், புர் என்று காபியை உறிஞ்சிக் குடிக்காதே. உனக்கொரு மனைவி வந்தால்,

நல்லா வளர்த்திருக்கா என்று என்னைக் குறை சொல்வாள்
நடை உடை பாவனையில் உன் உயர்வைக் கண்டு நான் பூரிக்கிறேன்.

வரப் போகிறவள் பெருமையடைவாள். எனக்கு
வந்ததும் தரட்டும் நல்ல ஆசானாகப் பணி ஆற்றிய பெருமை

அம்மா சமையலைத் தவிர வேறொன்றும் நீ அறியாததால்
அது மிக உயர்வாக உனக்குத் தோன்றுவதில் வியப்பில்லை.

இருந்தாலும் வார்த்தைக்கு வார்த்தை, எங்க அம்மா செய்கிற மாதிரி
இந்த சேப்பங்கிழங்கு ரோஸ்ட், முருங்கைக்காய் சாம்பார் மாதிரி வராது என்று

ஒப்பிட்டுப் பேசாதே! உன் அம்மாவுக்கு உன்னவளை போலபோலக் கார்
ஓட்டவும், வங்கிப் பணி ஆற்றவும், டைம் மேனேஜ்மெண்ட்டும்

ஆன்லைனில் அனைத்து வேலைகளை செய்யவும் தெரியாதப்பா! நான்
அன்றைய கெட்டிக்காரி! இவள் இன்றைய ''புத்திசாலி''

அம்மாவின் கட்டளைகள் ஆறு!
அதை அப்படியே நீ கேளு (கண்ணா)

உனக்கு உன்னிடம் உள்ள பேரன்பை மனதில் கொண்டு நான் உதட்டளவில் இல்லை உள்ளத்திலிருந்து சொல்லும் அறிவுரைகள் ஆறு:
1. அம்மா புராணம் பாடாதே!
2. அம்மாவோடு ஒப்பிடாதே!
3. அம்மாக் கோண்டு என்ற பட்டம் பயன் தராது!
4. அம்மாவைக் கொஞ்சம் பீடத்திலிருந்து இறக்கி வை. அவளும் மகிழ்ச்சியடையடும்!
5. அம்மா தேவைப்பட்டபோதெல்லாம் உதவிக்கு வருவாள் என்பதை சொல்லி வை!
6, உன்னவளுடைய அம்மாவையும் மதிக்கக் கற்றுக் கொள்!
நிறைவாக உன்
நினைவிற்காக..

மாமனாரை உயர்த்திப் பேசுவதால்
மருமகளுக்கு எந்தவித கசப்பும் ஏற்பட்டதாகச் சரித்திரமே கிடையாது!
ஆல்போல் தழைத்து
அருகுபோல் வேரோடி... நீடூழிவாழ வாழ்த்துக்கள்.

அன்புள்ள...........அம்மா................

# வளர்ச்சியை கண்டு வாழ பொறுக்காமல்

வெற்றி இப்படி தான் இருக்க வேண்டும்
மாநிலத்தில் இருந்து இந்தியா மற்றும் உலகளவில்

வளரும் வளர்ச்சியை கண்டு
வாழ பொறுக்காமல்

க(கொ)டுமையான தண்டனை என
கஷ்டத்தை அனுபவிக்க முடியுமா

பலாவை உரித்து வைக்க
பலர் எத்தனை சிரம படுகின்றனரோ

அத்தனை சிரமங்களும்...
அதன் சுவையை

அதன் வாசனையே
அதுவே காட்டிக் கொடுத்துவிடும்..

அது போல திறமை உள்ளவர்கள்
அவர்களுடைய எண்ணங்களும்

செயல்களும் மக்களுக்கு காட்டி
கொடுத்துவிடும்.. அது மக்கள் தம்

பால் வைத்திருக்கும் அன்பு
பாசம் மற்றும் நம்பிக்கையில்

வெளிப்படும்.. யாருடனும் கூட்டனி

சேராமல் தனித்து நின்று வெற்றி

பெறும் தன்மையில் வெளிப்படும்
பெற்ற வெற்றியும் அப்படித்தான்

காலம் மாறி தான் போச்சா

ஜீன்ஸ் போட்டா பொன்னு
சுடிதார் போட்டா ஆண்ட்டி

சேலை கட்டினா பாட்டி என
சேர்த்து வைச்சு சொல்லும்படி

காலம் மாறி போச்சு இல்லை
கடமையும் மாறி போச்சு

மாறிய சிலவற்றை இவ்வாரம்
மாற்றி யோசிக்கிற மாதிரி சிந்திப்போம்

அம்மி மாறி போச்சு
அதற்கு பதில் மிச்சி வந்துடுச்சு

ஆட்டுரல் போச்சு
அங்கே கிரைண்டர் வந்துடுச்சு

திரிகை போச்சு
திருப்பி பாருங்கள் டிரை கிரைண்டர் வந்துடுச்சு

முன்னதெல்லாம் தமிழில் இருந்தது
பின்னதெல்லாம் ஆம் கிலத்தில் இருக்கு

சப்பாத்தியை தேய்க்க வேண்டாம்
மாவை அழுத்தினால் ரொட்டி வரும் (ரொட்டிமேக்கர்)

காஸ் அடுப்பே இல்லை
கலர் கலரா இன்டெக்ஷன் ஸ்டெவ்

ஒவ்வொரு நாளும் சமைக்கும் நிலை மாறி
ஒரே நாளில் சமைத்து பல நாள் சாப்பிட ஃப்ரிட்ஜ்

கந்தையானும் கசக்கி கட்டு என்ற நிலை மாறி
வாஷிங் மிஷின் சேர்த்து வைச்சு துவைப்பதால் தண்ணீர் மீதமாம்

பல் துலக்குவது போல் பாத்திரம் துலக்கியது போய்
பார்த்து மகிழ இப்போ டிஷ்வாஷர் வந்துடுச்சு..

ஒட்டடை குச்சி வீட்டின் ஓரத்தில் இருக்கும் இப்போ
வேக்யூம் கிளீனர் வேல்யூ அதிகமாயிடுச்சு

அண்டாவில் போட்ட வெந்நீர் இப்போ
அழகழகாக வாட்டர் ஹீட்டரா இருக்கு

கோவில்ல கூட மேளம் அடிச்ச காலம் மாறி
கோவில் சுவத்துல இப்போ மின்சார மேளம்

மின்வெட்டு நேரம் பார்த்து கோவில் பூசை நேரம் கூட
மிக விரைவில் மாறுபடலாம் என அஞ்ச படுகிறது
...

மந்திரம் சொல்வதற்கு கூட ஒலி பேழைகள்
மலர் சார்த்து வதற்கும் மிஷின் என மாற்றம் வரலாம்

சைக்கிள் டயரை குச்சியில் தட்டி ஓட்டினோம்
கையில் உள்ள கருவியில் காரையே ஓட்டுகிறோம்
(வீடியோ கேம்ஸ்)

ஆரஞ்சு மிட்டாய் புளிப்பு மிட்டாய் என
அதை முழுமையாக சப்பி சாப்பிட்டோம்

பபுல்கம்முன்னு இப்போ திண்ணு துப்புறோம்
பக்கத்தில் உள்ளவர் காலில் ஒட்டும்படியாக

நீரையும் மோரையும் இலவசமாக தந்தோம்
நீருக்கும் காசு போட்டு பாக்கெட்டில் கொட்டுறோம்

வீட்டு வெளியே பலருடன் உட்கார்ந்து பேசினோம் இப்போ
வீட்டுக்குள்ளே (டிவி)ஒருவர் பேச பலரும் கேட்கிறோம்

தொலைபேசி மணிஅடித்தால் வீட்டுக்குள்ளேபோய் பேசுவோம்
அலைபேசி மணிஅடித்தால் வீட்டுக்கு வெளியே வந்து பேசறோம்
(நெட்வொர்க் கிடைக்காததால்)

வேட்டிகள் எல்லாம் காணாமல் போயிடுச்சு
வேண்டியபடி பாக்கெட் வைச்ச டிரயார்கள் பெர்முடாசுகள்

இரவில் போடும் நைட்டி பெட்ரூமில் மட்டும் இருந்து
இப்போ மார்க்கெட் வரையில் இது என பழகிபோச்சு

சூடாக சமைத்து சாப்பிட்டு பழகிய நாம் ஓட்டலில்
ஆர்டர் கொடுத்து காத்திருந்து சாப்பிடும் படியாச்சு

நாம் இருவர் நமக்கிருவர் என்ற நிலைபோய்
நாம் இருவர் நமக்கு ஒரு வர் என்பதும் போய்

நாமே ஒருவர் இப்போ
நமக்கேன் இன்னொருவர் என்ற நிலையில் இருக்கோம்

கையெழுத்து மறந்து போச்சு
பாஸ்வேர்டு நினைவிலே வந்தாச்சு

மூன்று விரலில் பிடித்த பேனா போய்
முழுவதும் பத்து விரலும் இப்போ கீ போர்டில்..
கணிப்பொறி பயன்பாட்டினால்

கண் மருத்துவத்தில் கூட
வலக்கண் ஸ்பெஷலிஸ்ட்
இடக்கண் ஸ்பெஷலிஸ்ட்டுன்னு படிப்புகள்..

மனைக்கு ஒரு வீடு என்ற நிலை மாறி ஒரு
மனையில் ஒரு டஜன் வீடுகள் என்ற நிலை

பெற்றோரை மதிக்கும் காலம் மாறிப் போய்
பெற்றோரை வெறுக்கும் டீன் ஏஜ் பிள்ளைகள்

மாற்றம் ஒன்று தான்
மாறாதது என்று எத்தனை தெரிந்தாலும்

மாற்றங்களை வரவேற்றதால் வந்தது
ஏமாற்றமா இல்லை ஏற்றமா ?

நம்மில் எத்தனை பேர் மாறிஉள்ளோம்
நம்மில் எத்தனை பேரை மாற்றி உள்ளோம்



# இத்தனை மாற்றமா?!

எலுமிச்சம் பழத்தை கார் வீலில் வைத்து விட்டு
எடுத்து குடிக்கிறோம் ரசாயணம் கலந்த எலுமிச்சை பிளேவரை

மாறின விளை நிலங்கள் வீடுகளாக என்பதினால்
மசாலா பண்டங்களை படத்தில் பார்த்து ருசிக்கிறோம்

எத்தனை எத்தனை மாற்றங்கள்
அத்தனையும் வளர்ச்சியா ? வீழ்ச்சியா ? தெரியாது

மாற்றங்கள் சிலவற்றை
மாமர நிழலில் அமர்ந்து யோசித்தபடி.. சில

வீடு பெரிதாக இருக்கிறது
விரிவாயிருந்த குடும்பம் சிறிதாக போயிட்டது

வசதிகள் அதிகம் தான் ஆனால்
வாழும் காலம் குறைந்து விட்டது

நிறைய பட்டங்கள் ...படிப்புகள்... ஆனால்
பொது அறிவு அவ்வளவாக இல்லை

அறிவு அதிகம் தான் ஆனால்
அந்தளவிற்கு நேர்மை இல்லை

திறமைசாலிகள் அதிகம்
பிரச்சனைகளும் அதிகம்

நிறைய மருந்துகள் உண்டு
ஆரோக்கியம் மிகவும் குறைவு

வண்டியை வேகமாக ஓட்டுகிறோம்

கோபத்தை அதிகமாக கூட்டுகிறோம்

நீண்ட நேரம் கணினி முன்னால்

குறைந்த நேரம் புத்தகத்தின் முன்னால்

அதிக நேரம் தொலைகாட்சி முன்
அரிதான நேரம் பிரார்த்தனையில்

தேவைகளை அதிகபடுத்திக் கொண்டுளோம்
தேவையில்லாமல் மதிப்புகளை குறைந்து கொண்டுள்ளோம்
அதிகமாக பேசுகிறோம்
குறைவாக நேசிக்கின்றோம்

இருக்கிறோம் ஆனால்
வாழத் தெரியவில்லை

உயர்ந்த கட்டிடங்கள் ஆனால்
உணர்வுகள் குறைந்துள்ளது

அகலமான பாதைகள்
குறுகலான பார்வைகள்

அதிகமாக செலவு செய்கிறோம்
குறைவாக வைத்திருக்கின்றோம்

அதிகமாக வாங்குகிறோம்
குறைவாக மகிழ்கிறோம்

சந்திரனை நோக்கி செல்ல திட்டமிடுகிறோம்
சாலையை கடப்பவருக்கு உதவுகிறோமா ?

வெளியிடங்களை வெற்றி கொண்டோம்

வெற்றிடமாக உள்ள உள்ளத்தில் கடவுளை கொண்டோமா

நிறைய எழுதுகிறோம்
குறைவாக கற்றுக் கொள்கிறோம்

கற்றுக் கொள்ள ஓடுகிறோம் துடிக்கிறோம்
காத்திருக்க மறுக்கிறோம்

வருவாய் அதிகமாக உள்ளது ஆனால்
நேர்மை குறைவாக உள்ளது

நிறையா வைத்திருக்கிறோம்
நிறைவாக வாழ்ந்திருக்கிறோமா

துரித உணவு தான் ஆனால்
தாமதமான சீரணம்

உயர்ந்த மனிதர்கள்
குறைந்த குணங்கள்

அதிக எண்ணிக்கை உணவுகள்
அதில் அநேகமாக குறைவான சத்துக்கள்

இரண்டு வருவாய்கள்
இரண்டு மனமுறிவுகள்

நாகரீக வீடுகள் ஆனால்
உடைந்த இல்லங்கள்

வாழ்வதற்காக மட்டுமல்ல வாழ்க்கை
வாழ்க்கை மகிழ்ச்சியுடன் கொண்டாடத்தான்

“என்றாவது ஒரு நாள்%”
என்ற வாசகத்தை நீக்கிவிடுங்கள்

இன்றே வாழத் தொடங்குங்கள்
இன்னொரு சந்தர்ப்பம் இனி வாராது



# மலருமா ...?
# மறுக்கப்பட்டோர் வாழ்வு

மலருமா...
மறுக்க்ப்பட்டோர் வாழ்வு

வயது கூடினால்
வருவது முதுமை மட்டும் அல்ல

மார் க(த)ட்டி நின்றாலும்
மறுக்கப்படுவது பல உரிமைகளும் தான்

இளமையாக முதுமையிலும்
இருப்பவருக்கு வாய்ப்புகள் மறுக்கப்படுவது சரியா ?

இளசுகளுக்கு ஏற்ப எப்படி நடந்து கொண்டாலும்
இவர்கள் பெற்ற சாபமோ என்னவோ

மதிக்கப்படுகின்ற அளவுக்கு உரிமைகள்
மறுக்கப்படுகின்றன, என்பதே உண்மை

முதியோர் இல்லங்கள் இவர்களை
முழுமையாக வரவேற்றாலும்

உழைக்காமல் சாப்பிட விரும்பாதவர்கள்
உழைக்க வாய்ப்பின்றி முதுமை கூட்டுக்குள்

அடைக்கப்படுகின்றனர்.
அங்கே உண்பதும் உறங்குவதும் என

அன்றாட பணிகளை சாவினை எதிர்நோக்கி

அவர்கள் கழிக்கும் அந்த
வாழும் நாட்கள் ஒவ்வொன்றும்
வாழும் வரை கொல்லும் நாட்களே

முதியோர் இல்லங்கள் முடியாத
முதியவர்களுக்கு மட்டுமே என்றால் சரி

இளமை நிறைந்த முதியவருக்கு எனில்
இல்லை இங்கும் இடம்

உழைக்க தென்பு இருக்கு – அய்யா
உழைக்க மனசிருக்கு என்றால் கூட

வாய்ப்புகள் ஒரு இடங்களிலும்
வழங்கப்படுவதில்லை காரணம்

முதுமை மட்டுமே என்றால் எங்கே சென்று
முட்டிக் கொள்வது

முதியோர் இல்லங்களில் இவர்கள் எண்ணப்படி
முடிந்தாலும் வாழ முடியாது

காசு கொடுத்து இருக்கும் இந்த இல்லங்கள் கூட
கட்டாயம் என சில விதிமுறைகள் வைக்கும்

வாழ்க்கை கசப்பானது என்பது
வாழ்வில் முதுமையிலிருப்பவருக்குத்தான் தெரியும்

கசப்பை ரசித்துக் கொண்டு எத்தனை ஆண்டுகள்
ரசனையுடன் வாழ முடியும்

தனக்கு தானே துணை என இருந்தாலும்
தர்மவான்கள் இல்லாத சூழலில்

முதியவர்கள் வாழ்வது அரிதாகி போனதும்
முழுமையான வாழ்வை ரசிக்க முடியாது போவதும்

வருத்தத்துக்குரியது மட்டும் அல்ல
வாழ்வின் ஓரத்தில் இருந்தபடி

வாழவும் முடியாமல் மறுக்கப்பட்ட
வாழ்வில் சாகவும் முடியாமல்

படும் கஷ்டங்கள் எல்லாம்
பாடாய் படுத்துகையில்

வாழாமலிருப்பதே மேல் என
வாழ்ந்து கொண்டிருக்கும் ஒவ்வொரு

முதியவரும் வந்து நிற்கின்றனர்
முன் வரிசையில்.. மனக்கண் முன்

ஏழையாய் பிறந்தால் வருத்தபட வேண்டியதில்லை
ஏழைகளுக்காக பல உதவி மையங்கள் உள்ளது

ஏழைகளை வளப்படுத்த தம் வாழ்வை அர்பணிக்கும் சிலர்
ஏழைகளாய் போவதும் வளர்ந்த ஏழைகள் மதியாமலிருப்பதும்
சக்கரம் என்ற வாழ்க்கையில் சுழலுகின்ற
சாகா வரம் பெற்ற சூழ்நிலைகளே

முடியாத சில முதியோருக்கு
முன்நின்று செயலாற்ற உள்ளது சில பல இல்லங்கள்

ஆனால்
திறமை, வலிமை, புதுமை, இளமை என
தினம் பல மையிருந்தும் “முதுமை” என்ற ஒரே காரணத்திற்காக

மறுக்கப்படும் வாய்ப்புகள்
மனதளவில் புண்படுத்துபவைகள் என்பதால்

இயலாத முதியோருக்கு
இல்லங்கள் உள்ளது போலவே மறுக்கப்பட்ட

இளைஞர்களுக்கு வேண்டும் மறு வாழ்வு பெற்றுத் தர
இல்லங்கள் வேண்டும்

இங்கு சோறு போட்டு தங்க வைப்பதற்கு பதில்
இங்குள்ளவர்களின் மனித வளத்தை பலப்படுத்த வேண்டும்

இப்போதே யோசிக்க தொடங்குங்கள் – நீங்கள்

இருபத்தைந்தை தொட்டு விட்டால்

முப்பத்தைந்தை தொட்டு விட்டால்
முதல் வரிசை தேவையில் முதியோர் இல்(லே)லம்

நாற்பத்தைந்தை தொட்டு விட்டால்
நாசூக்காக மறுக்கும் உரிமைகளை எதிர் கொள்ள வேண்டும்

அய்ம்பத்தைந்தை தொட்டு விட்டால்
அவ்வளவு தான் “வாழ்க்கை” என்ற வார்த்தையை மறந்திடனும்

அறுபத்தைந்தை தொட்டுவிட்டால் விடாமல்
ஆசைகள் நம்மை தொற்றிக் கொள்ளும் அதனால்

பாசங்களும் பற்றிக் கொள்ளும்; சில சமயங்களில் நம்
பசங்களின் (உரிமை) வாழ்வை கூட அது பறித்துக் கொள்ளும்

எழுபத்தைந்தையை தொட்டுவிட்டால்

எடுத்து யார் சொன்னாலும் புரியாது

இதற்கு மேலிருப்பவரில்லை என்பதால்
இங்கு அது பற்றி சொல்ல வில்லை



# லஞ்சம் வேண்டுமா?

லஞ்சம் தவிர்
நெஞ்சம் நிமிர்

இந்த வாசகம் எல்லா இடங்களிலும்
இப்போ பிரபலம். அது சரி

அரசு அலுவலகங்களில்
அன்று இருந்தது இன்றும் தொடருகிறது

ஆயிரங்களில் அன்று
ஆல் போல் வளர்ந்து லட்சங்கள் கோடிகளோடு இன்று

அடிப்படை வசதிகளை, நிர்வகிக்கும்
அரசாங்கம் செய்து தருவதில்லை.

ஆனால் சேவை மட்டும்
அல்ட்ரா மாடர்ன் அளவில் வேண்டும்

இந்த எதிர்பார்ப்பு உயர் அதிகாரிகள் மட்டுமல்ல
இந்த சேவையை பெறும் மக்களிடமும் உள்ளது

எப்படி அய்யா சாத்தியம்
எடுத்துச் சொல்ல ஒரு சில..

அரசு அலுவலகங்களில் உள்ள
அந்த பிரிண்ட்டர்கள் பழுதாகி உள்ளது

சரிபார்த்து தர ஆளில்லை..
சரியாக சொன்னால் சில அலுவலகங்களில்

கம்ப்யூட்டர் உள்ளது ஆனால் தேவையான
கான்பிரிக்கேஷன் இல்லை..
அதிகாரிகள் தங்கள் சொந்த லேப்புகளை
அவர்கள் வருமானத்தில் வாங்க முடியுமா

அதனால் தான் அரசாங்கமே மறைமுகமாக
அந்த பணிகளுக்கு மக்களிடமே பணம் பெற்று

மக்களுக்கு சேவை செய்ய ஊக்குவிக்கிறது
மனம் நிறைந்த சிலர் தங்கள் சொந்த குடும்பத்திற்கும்

எடுத்துச் செல்கிறார்கள்.. இப்போ சொல்லுங்க
எது லஞ்சம்..? எது லஞ்சம்..??

இரண்டு ருபாய்க்கு சாதி சான்றிதழ்
இப்போ இது சாத்தியமா?

அச்சடிக்க பேப்பர்களை அரசாங்கம் தருவதில்லை
அரசு ஊழியர்கள் மக்களிடம் பெற்றுத்தான்

மக்கள் சேவை செய்ய வேண்டியுள்ளது
மனிதாபிமானத்தோடு சொல்லுங்கள்..

பல துறைகளில் வேலைக்கு ஆள் இல்லை
பல அரசு அலுவலர்கள் தனி நபரை வேலைக்கு அமர்த்தி

அரசு வேலைகளை செய்கிறார்கள்
அவர்களுக்கு சம்பளம் மக்களிடம் வாங்கியே தரப்படுகிறது

லஞ்சம் எப்போது தொடங்கியது
லாபம் அல்லது பயன் பெற வேண்டும் என

ஒவ்வொருவரும் நினைக்கும் போது தான் முன்

ஒருமுறை சொன்னதை திரும்ப சொல்கிறோம்

தனக்காக வாழ்ந்தால் இந்த துயர் இல்லை மற்றவர்களை
தொந்திரவு செய்து வாழ்ந்தால் வரும் இது போன்ற தொல்லை
போகாத சொர்கத்திற்கும்
பார்க்காத கடவுளுக்கும் என

நமக்கு பயன் கிடைக்க வேண்டுமேன்று
நாம் ஏழைகளுக்கு தரும் தானம் லஞ்சம்

“யாரிடமும் எதையும் கேட்காமல் இருப்பதுதான் தானம்”; நம்மில்
யார் இதனை சரியாக அறிந்திருக்கின்றோம் சொல்லுங்கள்

கடவுளிடம் வைக்கும் பிரார்த்தனைகளுக்கும் நாம் சொல்லும்
காரணம் மற்றும் பரிகாரமும் லஞ்சமே

நான் வாழ வேண்டும் என்ற
நாகரீகமில்லாதவர்களின் செயல்களே லஞ்சம்

ரயில் பயணங்களில் சுஹஊ டிக்கெட் வைத்துக் கொண்டு
ரவுண்டடிக்கும் கூகூநு யிடம் கெஞ்சுவதும் லஞ்சம்

வீட்டுப் பிள்ளைகளிடம் வேலை வாங்குவதும்
வேலை செய்து முடித்ததும் “அது” தருவதாக சொல்வதும் லஞ்சம்

முடியாது என மறுக்க முடியாமல் போலி வார்த்தைகளை
முழும் போல நீட்டிச் சொல்வதும் லஞ்சம்

மாத்திரைகள் இன்றி வாழ தெரியாதவர்களை
மறுக்காமல் சொல்லலாம் லஞ்சம் தருபவர்கள் என

ஆதம் ஈவ் காலத்தில் தொங்கிய
ஆப்பிளில் இருந்து தொடரும் லஞ்சம்
லஞ்சம் இல்லாமல் வாழ்க்கை இல்லை
பஞ்சம் எப்போதும் லஞ்சத்திற்கு இல்லை..

தொடரும் லஞ்சம்
தொடர்வோம் லஞ்சத்திற்கு “ஜே” போட்டபடி..

வங்கி ஒன்றில் துணிகர கொள்ளை
வகை படுத்தி சொல்லுவதற்காக

நடந்த செய்தியை அப்படியே
நடந்த படி பகிர்ந்து கொள்கிறோம்

உங்கள் கற்பனையை சொல்லி
உள்ள செய்திகளுக்கேற்ப மாற்றிக் கொள்ளவும்

# தீபாவளி வாழ்த்து...

வாழத்து சொல்வதிலும்
வழக்கம் போல் அய்யரே முதலில்

தீபாவளிக்கு வாழ்த்துக்கள்
தீபாவளி அசூரன் மறைந்ததால் அல்ல

இறந்த நாளை கொண்டாடும்
இறக்கம் அற்றவர்களா நாம் (இல்லை)

தீபாவளி
தீப ஆவளி போன்ற கருத்து

அந்த கருத்துக்களில் இல்லை
அய்யருக்கு உடன்பாடு

அய்யரின் அனுகுமுறை வழக்கம் போல்
ஆம் வேறானது.. உதாரணத்திற்கு ஒன்று

பட்டாசு வெடிப்பது மகிழ்ச்சியை கொண்டாட(மட்டும்) அல்ல
பொதிந்து உள்ள அந்த தத்துவங்கள் தான்

ஒளி வந்து ஒலி வருமா ?
ஒலி வந்து ஒளி வருமா ?

நாத விந்து தத்துவங்களை
நமக்கு சொல்லும் இந்த மத்தாப்பு ரகசியம்

இனிப்பும் காரமும் எல்லா
இந்திய பண்டிகையிலும் உண்டு ஆனால்

லேகியம் மட்டும் தீபாவளிக்கு மட்டும் உண்டு
லேட்டாக போனாலும் இப்போதாவது
இது சொல்ல வரும் உண்மையை புரிந்து கொள்ள வேண்டாமா
இப்படி சொன்னால் எப்படி என யோசிக்காமல்

போலித்தனமாக மூட நம்பிக்கைகளுக்கு
போடுவோம் ஒரு வேட்டு

முதலில் வாழ்த்துங்கள்
முன்னிற்கட்டும் உங்கள் வாழ்த்துக்கள்

தீபாவளி வாழ்த்துக்களுடன்..



# விதியை வெல்ல முடியுமா

’விதியை முடியுமா
மதியால் வெல்ல

என்று பல முறை வாதம்
எங்கும் நடந்திருக்கலாம்

உண்மை பொருளை இங்கு சொன்னால்
உலகளவில் சொல்வதற்கு (லடிரவரநெ போன்ற) தொழில்
நுட்பமிருக்கு

உணர்ந்து கொள்ள மக்கள் இருக்கின்றனரா ?
உள்ளபடியே ஏற்க தயாராக உள்ளனரா ?

பதில் இல்லா கேள்விகளுள் இதனையும்
பட்டியலிட்டுக் கொள்ள வேண்டியது தான்

சரி
விதி மதி பற்றிய
விவரம் தான் என்ன ?

விதி என்பது நடக்கப் போவதை சொல்வதல்ல
மதி என்பது அறிவை பற்றியதும் அல்ல..

கைரேகை கலையில் விதி ரேகை எப்போதும்
கையிலுள்ள ஆயுள் ரேகையை ஒட்டியே அமையும்

வேறுபட்டால் பலன்களும் சொல்லாமலே
வேறுபடும் என்பது கைரேகை கலைஞன் அறிவார்

விதி முடிந்து விட்டது இவருக்கு என
விளக்கும் போதே புரிகிறதா அது ஆயுளை குறிப்பது

மதி என்பது சந்திரனை குறிப்பது என்பதில்
மறுப்பு இல்லை தானே..

சரி
பொருள் தெரிந்த பின்
பொருத்தி பார்ப்போமே

இடகலை பிங்கலை எனும்
இந்த பிராணயாம கலையில்

இடகலையை சந்திரகலை என்றும்
பிங்கலையை சூரிய கலை என்றும் சொல்வதுண்டு

ஏன் என்ற கேள்விக்கு
எப்போதும் அறிவியலை துணை கொள்வதுமுண்டு

உளவியல் அறிவியலை ஒப்பிட்டு இன்னுமொரு சமயத்தில்
உங்களுடன் பகிர்ந்து கொள்கிறோம்

பதினாறு அங்குலம் ஓடக் கூடிய சந்திரகலையை
பாதியாக சுருக்கினால் ஆயுள் கூடும் இது அறிவியல்

தூக்கத்தை வரவழைக்க இடது பக்கமாக
பெரியவர்கள் படுக்கச் சொல்வார்கள்

இடதுபுறம் படுக்கையில்
இருக்கும் நுரையீரலில் ஒன்று அழுத்தப்பட்டு

பிராண சக்தி சீராகிறது
பிரச்சனை இன்றி தூங்க முடிகிறது

குடிகாரர்களுக்கு உள்ள மயக்கத்தை(தூக்கத்தை)

குட்டி கதையாக பின்னொரு சமயம் விளக்கலாம்
“விதி” என்ற ஆயுளை
“மதி” என்ற சந்திரகலை(இடகலையால்)யால் வெல்லலாம்

என்பது இந்த கூற்றின் பொருள்
எப்போதும் உள்ளதை தெரிந்து கொள்வதற்கு இந்த சிந்தனை

ஆரம்ப நிலையில் இருப்பவர்களுக்கு
அதற்கு இப்படி பொருள் சொல்வதுண்டு

விதியை(நடக்க இருப்பதை) மதியால்(அறிவால்) வெல்ல முடியாது
திருவருளின் (பிரார்த்தனை) துணையால் வெல்லலாம் என்று

தெரிந்தவர்களுக்கு அதன் உண்மை பொருள்
தெரியும் அதனால் அவர்களுக்கு சொல்வோம்

விதியை (இறப்பை) மதியால்(இடகலையால்) வெல்ல முடியம்
விளக்கம் சரியாக புரிகிறது தானே

"காலா உன்னை
காலால் உதைக்கின்றேன் வாடா" என்றவன்

சுப்பிரமணி. அவன் சொன்ன "கால்" அவனுக்கு
சுருக்குனு வந்த வீரம் அல்ல

"கால்" என்றால் காற்று என்று பொருள்
கால் என்ற மூச்சு காற்றால் உதைக்கிறேன் என்றே பொருள்

'கால் கட்டு போட்டால் சரியாகும்' என

குடும்பங்களிலே அடங்கா பிள்ளைகளாய் உள்ள

கல்யாணமாகாத பையன்களுக்கு சொல்வர்
கால் என்ற மூச்சுக் காற்றை கட்டினால் எல்லாம்

சரியாகும் என்பதே பொருள்
சரியான பொருள் தெரிந்து

சுவையாக பேசுவோமே
சுவைபட வாழ்வோமே..



# மனைவியை பிரியலாமா

இப்போ ஒரு பயிற்சி சொல்ல போறேன்
இதை வைச்சு ஒரு செய்தி சொல்லப் போறேன்

கருத்து சொன்னவரு  அப்போ
கதை சொன்னாரு இப்போ

பயிற்சி ஒன்று தந்து விட்டு
முயற்சி எடுத்து சொல்ற விஷயம் என்னான்னு

பார்க்கின்றீர்களா... பொறுமையாக தொடர்ந்து
படியுங்கள்... பயிற்சிக்கு தயாராகுங்கள்

நாற்காலியில் அமர்ந்து இருந்தால் அப்படியே
நகராமல் இருங்கள்...

கைகள் இரண்டையும் ஒன்றாக
கோர்த்துக் கொள்ளுங்கள் (படத்தில் உள்ளபடி)

நடுவிரலை மடக்கி கொள்ளுங்கள்
நடுவிரல் உள்ளங்கையை தொட்டுக் கொள்ளட்டும்

இப்போது தான் பயிற்சி தொடங்குகிறது
இனி பொறுமையாக படித்தபடி சொல்வதை செய்யுங்கள்

இடது கையில் உள்ள ஒவ்வொரு விரல்களும்
வலது கையில் உள்ள ஒவ்வொரு விரலை தொட்டடும்

கையெடுத்து கும்பிடுவது போல ஆனால்
கையில் நடுவிரல் மடக்கியே இருக்கட்டும்

சில வினாடிக்கு பிறகு இரு கைகளிலும் பெருவிரலை
சிறிது விலக்கி பாருங்கள்.. எளிதாக விலகிவிடும்

(மற்ற விரல்கள் ஒன்றை ஒன்று தொட்டுக் கொண்டே
இருக்கட்டும்)

பெருவிரல் தான் பெற்றோர்கள்...
பெற்றோர்கள் நம்மை விட்டு பிரிந்து விடுவார்கள்

ஆள்காட்டி விரல்களை விலக்கி பாருங்கள்
அதுவும் எளிதாக விலகிவிடும்

அது தான் உடன் பிறந்தவர்கள்
அவர்களும் நம்மை விட்டு விலகிடுவார்கள்

நடுவிரல் மடக்கி இருக்கட்டும்
நடுவில் அதை கொண்டு வரவேண்டாம்

சுண்டு விரலை விலக்கி பாருங்கள்
சுலபமாக விலகிவிடும்

நம் பிள்ளைகள் தான்
நம்மை விலக்கி விடும் சுண்டு விரல்கள்

மோதிர விரலை விலக்கி பாருங்கள்
ம் ஹூம் விலக்குவது சிரம்மமாக இருக்கும்

அது தான் வாழ்க்கை துணை.
அது கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள உறவு

யார் பிரிந்தாலும் நம்மை விட்டு பிரியாத
யாரோ ஒருவர் வீட்டில் இருந்த வந்தவள்/வந்தவர்

இதை வெளிக்காட்டத்தான் அல்லது
இதை கௌரவிக்கத்தான் மோதிரம் போடுகிறோம்

Wedding ring என்று ஆங்கிலத்தில் சொன்னாலும்

றுநடட நெலைபேக்கு போடும் மோதிரம் என்றால் நோக்கம் இது தான்

இதை புரிந்து கொள்ளாமல்
இவர்கள் விவாகரத்து வேண்டி

நீதிமன்றத்தில் குடித்தனம் செய்வது
நியாயமாகவா இருக்கிறது

விவாகரத்து சட்டத்தை நீக்குவதற்கு
விவரமானவர்கள் கை நீட்டுங்கள்..

குடும்ப நீதி மன்றங்களை மூடுவோம்
குடும்பம் குடும்பமாக வாழ்வோம்..

நடுவிரலை பற்றி எதுவும் சொல்லவில்லை என
நினைப்பது புரிகிறது,, அது தான்

தன் முனைப்பு எனும் நுழுடீ அது
தன்னடக்கத்துடன் பணிந்து இருந்தால் தான்

கணவன் மனைவி உறவு வலுப்படும்
கண்ணியமான குடும்பம் கட்டுகோப்புடன் இருக்கும்

வாழ்க்கை துணை அமைவதெல்லாம் என
வாழ்த்து பாட போவதில்லை...

வந்து அமைந்திருப்பது எதுவானாலும் வாழ
வந்தது என வாழ்ந்து விட்டால்

மகிழ்ச்சி நம்மோடு இருக்கும்
மகிழ்வோடு பிறர்க்கும் அளிக்கலாம்

இந்த பயிற்சி
இந்த செய்தியை சொல்வதற்கே..

பயிற்சியில் பங்கு பெற்றவர்கள்
பயன் பெற்றதை மற்றவருக்கு சொல்லுங்கள்



# தர்மம் வெல்லுமா?

வெல்லுமா... தர்மம்..
வென்றதா தர்மம்...

நமக்கு பிடிக்காதவர்களுக்கு தண்டனை கிடைத்தால்
நாம் சொல்வது தர்மம் வெல்லும் என்பது தான்

தர்மம் வெல்வதானால் எத்தனையோ பல
தவறு செய்தவர்கள் குளிர்அறையில்

குடும்பத்தோடு மகிழும் போது....
குட்டு விழுந்தவருக்கு கிடைத்த தண்டனை மட்டும்

தர்மம் வென்றது என சொல்வது
தவறல்லவா..

தவறு செய்யாதவர் யார் இந்த உலகில்
தவறி செய்வது தானே தவறு..

தவறு வேறு பிழை வேறு
தப்பு வேறு தானே

இதன் பொருள் தெரிந்தால்
இத்தனை தொல்லைகள் வருமா

எற்றென்று இரங்கு செய்யற்க
என்று தானே வள்ளுவம் சொல்கிறது

சோதிடரை கேட்டால்
சனி தான் காரணம் என கை நீட்டுவர்

சனிபுத்தி குருதிசையில்
சனிக்கிழமை எனவும்

ஜென்மத்தில் குரு என
சகலரும் பழமொழிகளை உதிர்ப்பர்

இவையெல்லாம் ஒரு புறம்
இருக்க மக்களின் நம்பிக்கையை

மதிக்காத நீதிகளும்% குற்றவாளிகள்
மட்டும் வெளியில் என்பதும் கேலியாக உள்ளது

தீர்ப்பளிக்க அதிகாரம் உள்ளவருக்கு
தீர்ப்பு வழங்கும் நிகழ்வு இங்கே நிகழ்ந்துள்ளது

பாவங்களை மன்னித்த
பரமனுக்கு தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது

உங்களில் பாவம் செய்யாதவர்
உள்ளபடியே முதல் கல் எறியட்டடும்

என்று தீர்ப்பிட்டவருக்கு
என்ன நடந்தது என தெரியும் தானே

இருட்டு அறை என சொல்லும் அங்கே
இரு விழி இழந்தவரால்

அங்குள்ள கறுப்பு பூனையை
அது இல்லாத போது தேடி காண முடியுமா

மக்கள் கொடுக்கும் தீர்ப்பை விட
மகேசன் கொடுக்கும் தீர்ப்பே உயர்ந்தது

உள்ளே உள்ள அத்தனை பேரும் குற்றவாளி இல்லை

வெளியே உள்ள அத்தனை பேரும் புத்தன் காந்தி இல்லை

மாற்றங்கள் வரும்
மாறுதல்களும் வரும்

ஜெயிப்பவருக்கே வெற்றி உறுதி
ஜெபமே ஜெயம்

# கடவுள் எந்த மதம்

எத்தனையோ மதங்கள் இங்கிருந்தாலும்
எந்த மதம் என கேட்காத அரசு விண்ணப்பமில்லை

கடவுள் நம்பிக்கை உள்ளவரா நீங்கள் என என்னை
கண்டவுடன் கேட்பவரிடம் நான் கேட்கும் முதல் கேள்வி

கடவுள் என நீங்கள் எதை அல்லது யாரை சொல்கிறீர்கள் என
கேட்டுவிடுவேன்.. மௌனத்துடன் அவர் வேறு பேச
தொடங்கிடுவார்

கடவுள் இல்லை என சொல்வதற்கு உரிமை தந்த ஒரே மதம்
கடவுள் இல்லா கட்சியை சேர்ந்தவர்கள் உள்ள இந்து மதமே

இந்து மதத்தில் இவர்களுக்கு என்ன குழப்பமென்றால்
இத்தனை கடவுளர் எதற்கு என்பதில் தான்

தங்கம் ஒன்று தான் ஆனால் அது
தான் இருக்கும் இடத்திற்கேற்ப பெயர் மாறும்

கழுத்தில் போட்டால் செயின்
கையில் போட்ட பிரேசலேட் என

மதம் வேறு சமயம் வேறு..
மத பிரச்சாரமோ.. சமய பிரச்சாரமோ இல்லை

நாலு பேர் (நான்கு குருமார்கள்)
நம் இந்து மதத்திலும் உண்டு

வேறுபெயரில் கிருத்துவ மதத்திலும்
தேவன் அனுப்பியவராக இஸ்லாத்திலும் உண்டு

மற்ற மதங்களை ஒப்பிடுமுன் இந்து
மதத்தில் பெரிதாக உள்ள ஒரு சிறு ஒப்பீடு,,.

இப்படி சொல்வதால்

இந்த அய்யர் எந்த பக்கம் என யோசிக்க வேண்டாம்

"எது சரி" என்பது உரையாடல்
"யார் சரி" என்பது விவாதம்

இது சிந்திக்கத்தானே.. ஏன்
இப்படி என யோசிக்க வேண்டாம்
விவாதத்திற்குரியன வற்றை பற்றியும்
விளக்கமறிய சிந்திக்கலாம் தானே..

இப்படி சிந்தித்து பார்க்கவே
இந்த சிந்திக்க சில..

இறைவனை உண்டு என்று ஒப்புக்கொள்ளும் ஒளிமார்க்கம்,
இறைவனை இல்லை என்று மறுக்கும் இருள்மார்க்கம்

உண்டு என்று ஒப்புக்கொள்ளும் ஒளி மார்க்கத்தை சித்தாந்தம் என்றும்
இல்லை என்று மறுக்கும் இருள் மார்க்கத்தை வேதாந்தம் என்றும் சொல்வர்

இந்த உடலை மெய் என்று போற்றுவது சித்தாந்தம்
இந்த உடலை பொய் என்று போற்றுவது வேதாந்தம்.

அண்ட சராசரம் அனைத்தும் (உலகம், சூரியன்,கோள்கள்)
உண்மை என்கிறது சித்தாந்தம்.
அத்தனையும் உண்மையல்ல, மாயையே என்கிறது வேதாந்தம்.

அது என்னும் பிரம்மம் நீயாக இருக்கிறாய்! என்று உள்ளே காட்டுவது சித்தாந்தம். நீ
அதுவாய் இருக்கிறாய் என்று வெளியே தேடச் சொல்வது வேதாந்தம்

'அவன் கால்பட்டு அழிந்தது என் தலைமேல் அயன் கையெழுத்தே!' என்று
அருணாகிரிநாதப்பெருமான் பாடியதுபோல்,

'கர்மவினையைக் கடவுள் நினைத்தால்

கணப்பொழுதில் அழிக்கலாம்!‘ என்கிறது சித்தாந்தம்.

கர்ம வினையை யாராலும் அழிக்கமுடியாது, அதை
கண் முன்னே அனுபவித்துதான் தீர்க்க வேண்டும் என்பது
வேதாந்தம்.

பிறவி ஒன்றிலேயே நாம் மனது வைத்தால் முக்தி பெறலாம்!
என்கிறது சித்தாந்தம். ‘பல
பிறவிகள் எடுத்துப் படிப்படியாய்த் தான் முக்தியை அடைய முடியும்
!’ இது வேதாந்தம்.

உள்ளே கடவுளைப் பார்க்கலாம் என்கிறது சித்தாந்தம்.
‘உலகையே கடவுளாகப்பார்’ என்று உபதேசிக்கிறது வேதாந்தம்.

’தொண்டு செய்தால் கண்டு கொள்வார்கள் மகான்கள்!’
என்கிறது சித்தாந்தம்.
தொடர்ந்து கடும்பயிற்சிகள், தவ முயற்சிகள்,

கடும் வைராக்கியம்,
கடும் ஒழுக்கம் தேவை என்கிறது வேதாந்தம்

இன்னமும் சொல்லலாம்

இருந்தாலும் இது போதும்



# விலங்குகளுக்கு விலங்கு

கொஞ்சம் சநடயஒ பண்ணிக்க
நெஞ்சத்தை இங்கு பதிக்கவும்

மிருக வதை என்றால் முன்னாள் நடந்த
மனித வதையை போற்றுவது சரியா ?

நீதிமன்றம் இது போன்ற வழக்கிற்கு
நேரம் செலவழிப்பது முறையா ?

கேழ்வரகில் நெய் வடிகிறது என்றால்
கேட்பவருக்கு மதி எங்கே போனது...

முதலில் ஜல்லிக்கட்டு மிருகவதை என வாதத்தை
முன் வைத்து ஏமாற்ற பார்த்தார்கள் பிறகு

ஜல்லிக்கட்டு ஒரு குறிப்பிட்ட
ஜாதியிர்க்கான விளையாட்டு என்று கூறி

நம்மை பிரிக்க முயன்றார்கள்
நம்மை பிரிக்க முடியவில்லை என இது

இந்துக்களின் விளையாட்டு அதற்கும்
இம்மதம் சாரதவருக்கு தொடர்பில்லை என

நம்மை பிளவு படுத்த முயல்கிறார்கள்.
நமது பண்பாட்டுடன் இணைத்து இருப்பது

பசுக்களும், காளைகளும் – நமது கிராமங்களின்
பண பொருளாதாரமாக விளங்குகின்றன.

திட்டமிட்டு இதை ஒழிக்கவே
திறமையை இது போன்ற செயல்களில் காட்டுகின்றனர்

பாலுக்கும்
தோலுக்கும்

இவர்களுக்கு
இந்த மாடு தானா கிடைத்தது

இது போன்ற பலவற்றை
இங்கே பட்டியலிடுகிறோம்

எதில் எது வதை
என்று நீங்களே சொல்லுங்க;

இயேசுவை சிலுவையில் அறைந்தனர்
இப்போ சொல்லுங்கள் இது வதை இல்லையா ? – அந்த

அந்த சிலுவையை போற்றும் விதமாக இன்றும்
அப்பிரிவு மக்கள் அணிகிறார்களே அது சரியா

இன்றும் கோவில் வாசலில் நிற்கும் யானையில் கால்களில்
இரும்பு சங்கலியால் கட்டுவது மிருக வதை இல்லையா ?

சர்கஸில் விலங்குகளை வைத்து
சாகசம் காட்டுவது வதை இல்லையா ?

இந்துக்கள் கடவுளர்கள் ஒவ்வொருவருக்கும்
இன்றும் விலங்குகளை வாகனமாக கொண்டு

வழி படும் பழக்கம் கொண்டவர்கள்..
வழி தவறி என்றும் செல்லாதவர்கள்..

நல் வாழ்வு முகாம் யானைகளுக்கும்
நடத்தும் தமிழக அம்மா அரசு... ஒன்றே

இதற்க்கு சான்று...
இனி துணிந்து
துள்ளி கிட்டு நடத்துவோம்
ஜல்லிக்கட்டு....

யாராவது கேட்டால்.. மாடு
எப்போடியோ அறுத்து கிட்டு ஓடுது

ஓடி போய் பிடிக்கிறோம் என
ஒய்யாரம் செய்யாமல்..

வீரமொடு சொல்லுங்க இது பொங்கல்
விளையாட்டு என்று..



# எனக்கு ஒரு இரங்கல் கடிதம்

முகம் தெரியாத நிலையில் சில

முகப்பு புத்தக நண்பர்கள் வகுப்பறை நண்பர்கள்

அவர்கள் விரும்பும் நேரத்தில்
அன்போடு சில பேசுவார்கள்...

யாரும் என்னை நம்பி இல்லை
யாரையும் நம்பி நான் இல்லை

எனக்கு உறவுகள் என்று யாருமில்லை
எண்ணிச் சொல்லும் நண்பர்களும் இல்லை

வாழ்வது எதற்கு என தெரியாமல்
வாழ்ந்து கொண்டு இருக்கின்றேன்

வாழ்ந்து சாதிக்கப் போவது ஏதுமில்லை எனினும்
வாழ்ந்தாக வேண்டும் சாகும் வரை என்பதினால்

ஒருவருக்கும் தீங்கு நினைத்ததில்லை
ஒருவரையும் வெறுத்ததில்லை

உள்ளதை சொல்வேன் எண்ணத்தில் பட்டபடி
உள்ளபடியே சொன்னதை செய்வேன்

என்னை வெறுப்பவர்களும் உண்டு. அவர்
எவராக இருந்தாலும் விலகி விடுவேன்

தவறாக மனம் நோகும்படி எதையாவது பேசினால்
தயங்காமல் மன்னிப்பு கேட்பேன் என்னிடம் தவறிருந்தால்

மற்றவர்களுக்கு தொந்திரவு செய்யாமல் என்
மனம் விரும்புவதை மட்டும் செய்வேன்

ஒழுக்கம் நிறைந்தவன் நான் என

ஒரு போதும் சொன்னதில்லை எனினும்

ஒழுக்கத்தில் சிறந்தவன் என்பதை பழகும்
ஒவ்வொருவரும் சொல்லி மகிழ்வார்கள்

எதற்காக வாழ்கிறேன்
என்று தெரியாமல் வாழ்ந்து கொண்டிருக்கின்றேன்

சேவை மையங்களில்

சேர்ந்து விட எண்ணினேன்

அவர்களும் சேர்த்துக்கொள்ள தயங்குகிறார்கள்
அதற்கு காரணம் நான் ஒழுக்கமானவன் என்பதால் இருக்குமோ

அவர்கள் வெறுக்க வில்லை
அஞ்சுகிறார்கள் என்பது மட்டும் தெரிகிறது

நல்லா படிக்கிற பிள்ளைகளை மட்டும் சேர்த்துக்கொள்ளும்
நம்முடைய இன்றைய பள்ளிகள் போல அவர்களும்

இறப்பதற்கு அஞ்சும் சிலருக்கு முன்
இப்போவே இறப்பதற்கு தயாராக இருக்கிறேன்

இல்லாமையினால் சொல்லவில்லை.. எல்லாம்
இருப்பதினால் சொல்கிறேன்...

உண்பதும் உறங்குவதும்
உண்மையிலேயே இறைவனை வணங்குவதும் என

நாட்களை நடத்திக் கொண்டு இருக்கின்றேன்
நாளை நன்று நாளை நன்று என நானும்

உங்களோடு வாழ்ந்து கொண்டிருக்கின்றேன்
உணர்வுகளை உங்களோடு பகிர்ந்த கொண்டபடி...

சாவு மணி எனக்கு அடிக்கும் வரையில்
சாதாரணவர் போல உங்கள் எண்ணத்தில்

வலம்
வருவேன்

அனுதாபம் காட்டவோ
ஆதரவு வேண்டியோ இதை எழுதவில்லை

இறப்பதற்கு முன்
இதையாவது எழுதனும் என்று எழுதுகிறேன்

வயதிற்கும் சாவுக்கும் தொடர்பு இல்லை
வாழ்க்கையை வாழ்ந்துவிட்டால்

வாழ்வில் என்ன வேண்டும் என
வகைபடுத்தி பாருங்கள் எல்லாம் புரியும்
சாவதற்கு முன்
சமாதி கட்டிக்கொள்ள வேண்டும்

தற்கொலை செய்து கொள்ள மனம் இல்லை என்னை
கொலை செய்யும் அளவிற்கு யாருக்கும் நான் தீங்கு செய்தவன்
இல்லை

இயற்கை மரணம் வரட்டும் என
இந்த கணம் வரை காத்துக்கொண்டிருக்கிறேன்

காலனை காலால் உதைப்பதாக சொன்னான் ஒருவன்
காலன் வருவான் என்று சிவனை கட்டிக்கொண்டான் அந்த
சிறுவன்

அவர்களுக்குமுன் ஒவ்வொரு நாளும்
அந்த சிவகணங்களை எதிர் நோக்கி காத்திருக்கிறேன்

மீண்டும் பிறப்பு எனக்கு இல்லை என
மீண்டும் ஒரு முறை சொல்ல விரும்புகிறேன்

போர்டிங் பாஸ் உடன் காத்திருகிறேன்
போர்டிங் அறிவிப்பு வந்தவுடன் சென்று விடுவேன்

சென்று வருகிறேன் என
செல்லும் போது சொல்ல முடியாது என

இறந்து விட்டதாக சொல்ல கூட யாரும் இல்லை என்பதால்
இப்போதே சொல்லிவிடுகிறேன்

அன்பிற்கும் உங்களின் நட்பான
ஆதரவுக்கும் நன்றிகள்

விசு அய்யர்

தங்கள் ஆதரவுக்கு நன்றிகள்
தவறி வந்த கருத்தல்ல அவை

உள்ளத்தின் ஆழத்தில் இருந்து வந்த
உண்மைகள் தாம்

மீண்டும் பிறவா நிலையை எனக்கு தரும் இந்த
மரணம் வருந்தும்படியான அவலம் இல்லை. தங்களின்

அன்பான வார்த்தைகளுக்கும்
ஆதரவான நட்பிற்கும்

நன்றிகள்
நன்றிகள்
இந்த பதிவிற்கான காரணம்
இந்த வாழ்க்கை போதும் என்ற எண்ணம் தான்

தனிமை என்னை வருத்தவில்லை
தரமான ஆரோக்கியம் நிறைவாக இருக்கு

ஆசை எதிலும் இல்லை என்பதினால்
அதிகம் சம்பாதிக்க எப்போதும் எண்ணியதில்லை

எனினும் இந்த வாழ்க்கை போதும் என்ற
எண்ணம் எண்ணத்தில் வந்தது பகிர்ந்துகொண்டேன்

இன்னொருமுறை நன்றிகளை

இங்கே சொல்லிக்கொள்கிறேன்

வழக்கமான நகைசுவை
வாசித்து ரசிக்க வைத்தது நீங்கள்

சொல்லும் கைலாயம் சில ஆண்டுக்கு முன்
சென்று வந்ததை நினைவூட்டியது

நான் யாருக்கும் தீங்கு செய்யவில்லை என்றால்
நமக்கு தீங்கு செய்பவர் இருக்கமாட்டார்கள் தானே

சில உண்மைகளை
சில சமயம் இப்படித்தான் சொல்ல வேண்டும்

சாகத்தானே வேண்டும் எல்லோரும் ஒரு நாள்
சாக நான் தயார் என்றால் ஏன் மகிழ்ச்சி உடன்

பாராட்டு வதற்கு பதில்
பயப்படுகிறார்கள் என்பது தான் புரியவில்லை

என் உணர்வுகளால் உங்களுக்கு மட்டும் சொல்கிறேன்
நான் இறப்பதற்கு முன்னால் ....



# நூல் ஆசிரியரின்




## இந்த புத்தகங்களை ஆன்லைனில்...

அமேசான்
விக்கிமீடியா
ஸ்கிரைப்ட் மின் நூலகம்
கூகிள் ப்ளே ஸ்டோரில் பெறலாம்.




**ஆடியோ புத்தகமாக**
**சானல் ஜி யில் கேட்கலாம்**




**இந்த புத்தக கட்டமைப்புக்கு பணம் தரலாம். இது இன்னும் புத்தகம் வெளிவர ஊக்கமளிக்கும்.**









# நூலாசிரியர் பற்றி

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட் செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெயில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

இவரின் எண்ணக் கருத்துக்களை நூலாக்கி படைப்பதில் பதிப்பாளராக பெருமை கொள்கிறோம்.

-பதிப்பாளர்